139


உள் நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 3.

வெளி நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 4.

RÉPUBLIQUE FRANÇAISE
LIBERTÉ—ÉGALITÉ—FRATERNITÉ

VITTAGAM



ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
Tamil Pandit
Jaffna
CEYLON.



JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, No. 2,
Pondichéry.


நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

குறள்.


காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. III. | புதுவை, தாது ௵ வைகாசி ௴ கஎ (14—5—36) | NO. 22.


### சுத்தசாதகம்.

அடுத்தமற்றிரண்டுசெனனத்தில்வீட்டை
யடைந்திடுந்தோம்பதநெறியோர்

அடுத்தமற்றேருநற்சனனத்தில்வீட்டை
யடைந்திடுந் தற்பதநெறியோர்

அடுத்தவிச்சனனந்தனிலடைந்திடும்வீ
டசிபதநெறியுளோரிவரும்

அடுத்தவிவ்வுடலோடடைந்திடாவிடின்மே
லாக்கையோன்றெடுக்குமென்றுணர்வாய்.

ஒடுங்கிடுங்காலந்தோன்றினவடைவே
யொடுங்கிடுமென்றுரைப்பதனல்

ஒடுங்கியகாலஞ்சத்தியவாதிக்கொடுங்குமிவ்
வுடறன்மாத்திரையின்

ஒடுங்கிடுங்காலமசத்தியவாதிக்கொடுங்கு
மிவ்வுடலசத்தியமாய்

ஒடுங்கிடுங்காலமுடலிங்கேவீழ்ந்தா
லொடுங்கின தில்லையென்றுணர்வாய்.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.
[திருவாசகம்]


# வித்தகம்

புதுவை
தாது ௵ வைகாசி மீ௳ கஉ


## கலக்கம்.



உலகியல் வேறு பார மார்த்திகம் வேறு எனக் கருதி அவ் உலகியலை அறவே வெறுத்து அருந்தல், பொருந்தல்களை ஒழித்துச் சரீரத்தை அலட்சியம் செய்து அதனை வாட்டி வருத்தி நெறியல்லா நெறிகளைக்கைக் கொண்டு ஒருபால் ஒதுங்கியும்,

இயல் பாகவே ஓடுகின்ற மூச்சை வலிதின் அடக்கி வாயோடு கண்மூடி வதிந்தும்,

அசேதனத்துவம் அடைதலே — செத்துப் போதலே பேரின்ப லாபம் என—வீடு பேறு எனத் துணிந்து புருஷார்த்தங்களை இழந்து மாண்டு போகும் உலக மாக்களுக்கு,

அவ் உலகியலை நிறை யோடு தழுவுதலே வாய்மையான புருஷார்த்தங்களை அடையும் நெறி என வற்புறுத்துவான் வேண்டி,

சீவ காருண்ணிய மூர்த்தி யாகிய இடைக்காடர் என்னும் புலவர் பெருமான் அருளிச் செய்த "மூவடி முப்பது" என்னும் உயரிய தமிழ் வேதத்தில் பொருட் கூறு என்னும இரண்டாவது அத்தியாயத்தில் ஏழாம் சூத்த மகுடமாகி மிளிர்வது "கலக்கம்" என்பது.

இதற்கு முந்திய சூத்த மகுடமாகிய "நல்குரவு" என்பது வித்தகம் தொகுதி 3. இல.21இல் ஒரு சிறிது விளக்கிக் கூறப் பட்டது.

பொன் வண்ணனாகிய ("ஏமன்")சிவ பரம் பொருள் முன்னிலை யாகிய இவ் உலகப் பொருள்களை மலிவாக-ஏராள மாக உளவாக்கி, இவ் உலகை உடலுயிரை இயங்கச் செய்து,

சீவர்கள் அவற்றை நிறை முறை யோடு பஞ்சீகரணித்து உய்தி பெறுதற்குரிய இயம நியமாதிகள் ஆகிய நூல்களையும் நூல்கள் என்னும் ஒழுங்குகளையும் ஒழுங்குகள் என்னும் நிறைகளையும், பலப் பலவாக ஆக்கி,

அருந்தல் பொருந்தல் களாகிய ஈவு ஏற்புக் களால் தேவுண்மையை உணரும் படி வைத்து,

முன்னிலைகளின் இயல்பை அறிந்து அவற்றை நிறை முறை யோடு உறவு படுத்தி ஒப்புர வொழுகுதற் குரிய "நல்குரவு" என்னும் தடத்தை அடையச் செய்தலால்,

அத் தகைய நல்குரவு வாழ்வதாக என அதற்கு நல்வரவு கூறி அதன் பண்பும் பயனும் "நல்குரவு" என்னும் மகுட முடைய மேலைச் சூத்தத்தால் சுருங்கக் கூறி விளங்க வைத்தனர் எமது புலவர் பெருமான் என அறிதற் பாற்று.

ஆதலால், அத்தகைய நல்குரவு என்னும் தடத்தை அடையப் பெற்ற மாணவனது உடலும் உயிரும் ஒழிலற ஒன்றுத லாகிய — ஒன்றுதற் கண் உளவாகின்ற "கலக்கம்" என்பதன் பண்பும் பயனும் ஃஷி சூத்தம் நுதலிய வாறு ஈண்டு ஒரு சிறிது விளக்கமுற உரைக்கப் படுகின்றது.

### மூவடி முப்பது.

———

பொருட் கூறு. 2.
கலக்கம். சூத்தம் 7.

தெளிவின் வித்தாய்த் திறலறி வுறுப்பதை
நலம்பட நாட்டும் நெறிவிளக் காவதைக்
கலக்க மென்றே கழறுவ துலகே.

என்பது சூத்தம்.

சத்தும் சித்துமாகிய உடலும் உயிரும் ஒன்றுத லாகிய — ஒன்றுதற் கண் உளதாகிய கலக்கத்தினுற்றான் — கலக்கம் என்னும் சாதலுறாச் சாதலினுற்றான் உறுப்புக்கள் திரியும்—மாற்றிப் பிறத்தல் கைகூடும் என்பதனை உணர்த்துதல் நுதலிற்று இச் சூத்தம் என்க.

உலகியலில் கலக்கம், உரியார் மரணம் முதலியவற்றாலும், முன்னிலைக் கோரணிகளாலும், படிப்புச் சம்பந்தமான ஆராய்ச்சிகளாலும் உளதாகும் எனவும், அக் கலக்கங் களால் — அவச்சலனங்களால் தெளிவு என்னும் அமைதி உளதாகும் எனவும்,

அக் கலக்கமே நன்மையை அடைதற் குரிய நெறியாகிய விளக்கமாய் அமையும் எனவும்,

எம் போலிய உலகியலுக்கு ஒப்பிய படிப்பாளிகள் பொருள் காணும் படியும்,

உண்மையை நாடும் ஆற்றலும் காதலும் உடையார் அதனைக் குருவருளால் அறிந்து உய்தி யடையும் படியும் அமைக்கப் பட்டது இச் சூக்தம் என்க.

சீவர்களாகிய நமக்கு உளவாகும் கலக்கங்கள் எனப் படும் அசைவுகள் — அவச் சலனங்கள் பல்வேறு வகையின வாய் அளப்பில ஆகும்.

இத்தகைய கலக்கங்கள் சில பல காரணங்களால் மெலிவு பெற்றுழி உளவாகும் தெளிவு என்பதும் போலியே ஆகும்.

இதனுல் மேலும் கலக்க மின்றி வாய்மையான அமைதி பெறுதல் முடியாத காரியமே என்பது பட்டாங்கு.

உலகியலில் ஒவ்வொருவரும் தம்தம் உடைமை என நம்பி அமைந்த மண் பொன் என்பன வற்றை— தத் தமக்கு உரியர் என் நம்பிய தந்தை தாயர் பெண்டிர் மக்கள் நண்பர் முதலியோரை இழந்த காலத்தும், முன்னிலைகளால் துன்பம் நேர்ந்த காலத்தும் கலக்கம் அடைகின்றனர்;

பின் சில பல காரணங்களால் இக் கலக்கம் மெலிவடைய ஒருவாறு தெளிவு பெறுகின்றனர்; பின் வேறு காரணங்களால் கலங்கு கின்றனர்.

இவ்வாறு போலியான கலக்கத்தையும் போலியான தெளிவையும் மாறி மாறி அடைந்து சஞ்சல முற்றுப் பிணி மூப்புக்களுக்கு ஆளாகி மாண்டு போவதே எம் போலிய உலக மாக்கள் மாண்பு.

உரிய சாதகங்களால் சிற்றின்பக் கடல் கலக்கற்று அக் கலக்கத்தால் ஆய தெளிவால்—காதலால் அசைக்கப் பட்டு ஒலிக்கும் அமல ஒலியாகிய எம் பெருமான் திருவடியை அடையப் பெற்றவர்க்கே மேலே கூறிய அவச் சலனங்கள்—கவலைகள் — கலக்கங்கள் — துன்பங்கள் ஒழியப் பெறுவன ஆகும்—மாற்ற மடைவன ஆகும்.

இது பற்றியே,

### குறள்.

தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் [கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

(ஷ 1-ம் அதி. கடவுள்வாழ்த்து செ.7)

என அருளிச் செய்தனர் எமது பொய்யில் புலவர்.

ஆண் பெண், சத்துச் சித்து, நாதம் விந்து, ரவி மதி, உடல் உயிர் எனப், பிரிந்து தோன்றி இயங்குவது உலகியல்.

உடல் பொய் யானது — அநித்திய மானது —தோன்றி மறையும் தன்மை யுடையது —அழியும் தன்மை யுடையது எனக் கூறப் படினும் புலவர்களால் அவ் உடலுக்கு "மெய்" என்னும் திவ்விய திரு நாமம் சூட்டப் பட்டிருப்பது மறுக்க முடியாத தொன்றும்.

ஒலி வரி வடிவங்களின் பாகு பாடுகள் சிலவற்றை விளக்க எழுந்த நூல்களாகிய இலக்கண நூல்களிலும் அவ் ஒலி வரி வடிவங்களை மெய் என்றும் உயிர் என்றும் பிரித்துக் காட்டி யிருப்பதும் மறுக்க முடியாததே!

மெய் என்றும் உயிர் என்றும் பாகுபாடு செய்யப் பட்ட அவ் ஒலி வரி வடிவங்களின் உற்பத்தித் தானம் எது என்பதை இலக்கணப் படிப்பாளிகள் அறியார் — அறிய முடியாது என்பதும் மறுக்க முடியாததே!

அறிவான் மிக்க பெரியா ராகிய ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

### தொல்காப்பியம்.

எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை அரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
யஃதிவணு வலாது எழுந்து புறத்திசைக் [கும்
மெய்தெரி வளியிசை யளவு நுவன்றிசினே.

(ஷ எழுத் ததிகாரம் — பிறப் பியல் [சூத்.20 )

என்னும் நூற் பாவில் எழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தைப் பூரணமாக அறிந்து கூறுதல் தம்மால் முடியாத காரியம் என்பதனை வெளிப் படையாகக் கூறி,

அஃது ஒலி பீடமாகிய எழுதாமறை என்னும் அந்தணர் மறையை அறிதலாற்றான் — அநுபவமாகக் காணுதலாற்றான் அறியப் பட வேண்டும் என்பாராய்

“அந்தணர் மறைத்தே”

எனக் கூறி அமைந்ததும் இலக்கணப் படிப்பாளிகளால் மறுக்க முடியாததே ஆம்.

இவ் ஆசிரியர் நாத பீடத்தை அணவி இவ் உண்மைகளை அநுபவமாக உணர்ந்த தத்துவப் பெரியார் அல்லர் ஆயினும், பிற் காலத்து வித்துவான் களினும் கூடிய மதிப் பொலிவு உடையர் ஆதலால் இவ்வாறு வஞ்சகமின்றி உண்மையை உரைத்து விலகிக் கொண்டனர் என அறிதற் பாற்று.

மெய்யி னின்று உயிர் தோன்றிற்று?
உயிரி னின்று மெய் தோன்றிற்று?

என்னும் கடாவுக்கு விடை இறக்கும் பெற்றி இலக்கண இலக்கியப் படிப்பாளிகளுக்குச் சூனியமே என்பதும் மறுக்க முடியாததே!

உயிரெழுத்து மெய் யெழுத்துக் களின் இலக்கணம் — உற்பத்தித் தத்துவம் சிறிதும் அறியாத — அறிய முடியாத—அறியும் ஆற்றல் இல்லாத படிப் பாளிகள் பலர்,

தத்துவ ஞானத்தைப் பற்றி—வேத அந்தம் சித்து அந்தம் (வேதாந்தம் சித்தாந்தம்) என்னும் சத்துச் சித்தின் அந்தத்தை — அந்தங்களைப் பற்றி அவற்றைக் கண்டவர்கள் போல — கண்டு உண்டவர்கள் போலப் பேசியும் எழுதியும் சாச்சை விளைத்தும்,

மெய் உயிர் என்னும் இரண்டில் உயிர் என்பது அநாதி—ஆதி யில்லாதது அந்தமும் இல்லாதது எனவும்,

மேய் என்னும் திரு நாமம் தாங்கிய உடல் மாத்திரம் ஆதி அந்தம் உடையது —தோன்றி அழியும் தன்மை யுடையது எனவும் கூறித் திரிந்தும் சாத்திரப் பெயர் பூண்ட நூல்கள் வாயிலாக வெளிப்படுத்தியும் "சொற் பொழிவுகள்" நிகழ்த்தியும் மெய்யாகிய உடலைப் பிணமாக்கி — பொய் யாக்கி மண்ணில் வீழ்த்தி மாண்டு போயினர் —மாண்டு போகின்றனர் என்பது மறுக்க.முடியாததே!

உலகியலில் இது முக்கியமான கலக்கம் என்பது நன்று பெறப்படுகின்றது.

மேலே கூறிய கொள்கைக்கு ஒப்பக் கிளக்கப் படுவதோர் கதையும் உண்டு.

அஃதாவது :—

வியாகரண தர்க்க விற்பன்னர் எனப் பெரும் புகழ் படைத்த சாத்திரியார் ஒருவர் கடைக்குச் சென்று ஒரு தொன்னையில் நெய் வாங்கி வீட்டுக் குத் திரும்பி வரும் வழியில்,

நெய்க்குத் தொன்னை ஆதாரமா?

தொன்னைக்கு நெய் ஆதாரமா?

என்னும் அரிய பெரிய —மகத்தான —மஹோநந்தமான —சிக்கலான தர்க்கப் பிரச்சினையானது அவரது இன்மையால் அவர் பால் ஆக்க முற்றது.

அதனை நிவிர்த்தி செய்து — தமது கலக்கத்தை நிவிர்த்தி செய்து தெளிவு பெறுவான் முயன்று தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்தார் சாத்திரியார்.

இவர் தம் தர்க்க ஆராய்ச்சி அகச் சான்றும் புறச் சான்றும் கலந்ததோர் அகப் புறச் சான்று அல்லவா?

தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்த பின் தெளிவடையலாம் என்னும் நிச்சயம் கொண்டு இயங்கிய சாத்திரியார் கண்டது என்னை?

ஆ! ஆ! காசு கொடுத்து வாங்கிய நெய்–பணம் கொடுத்து வெண் பொன் கொடுத்து வாங்கிய நெய் பிருதிவியில் — மண்ணில் — தெருப் புழுதியில் வீழ்ந்ததையே கண்டனர். கண்டு தமது சங்கை சிறிதும் நிவிர்த்தி பெறாது மேலும் கலக்கம் அடைந்தனர்;

"நெய் இல்லா உண்டி பாழ்"

(ஔவையார்)

என்றவாறு தமது அருமந்த உண்டியும் பாழாய் அதனாலும் கலக்கம் பெருக்க மடையப் பெற்றனர்.

"கலக்கம் தெளிவின் வித்து"

என்பது தத்துவப் பெரியார் கண்ட அநுபவ உண்மை யன்றோ!

அங்ஙன மாயின்,

மேலே கூறிய சாத்திரியார் தம்பால் ஆக்க முற்ற முதலாம் கலக்கத்தி னின்றும் வெளியேற —தெளி வடைய முயன்றனரே!

அவர் முயர்ச்சியால் ஆயது என்னை?

பின்னும் கலக்கங் களையே கண்டு அவதியுட் பட்டு அலமந்தனரே தமது முதலாம் கலக்கத்தால் தெளிவடையாது தமது இன்மையால் அக் கலக்கத்தில் அதிக நிறையைக் கலக்கு மாறு செய்து கொண்டனரே யன்றி;

தமது வியாகரண தர்க்கப் படிப்பினால் ஆய தீக்ஷண்யம் என்னும் தெளிவால் தமது கலக்கத்தில் அதிக நிறையைப் புகுத்தித் தமது இன்மையைப் பெருக்கிக் கொண்டனரே யன்றித் திவிலை யேனும் தெளிவடைந்த பாடு இல்லையே!

இக் கதையையே பலகாலும் விளம்பிச் சிரகா கம்பிதம் செய்து உடல் குலுங்க நகை புரியும் மேதாவிகளும் இப் பூவுலகில் உண்டு அல்லவா?

உடலுயிர்களின் இலக்கணம் அறியாது—அந்நியோந்நிய சம்பந்தம் அறியாது குதர்க்க வாதம் புரிந்து கலக்க நிறையைப் பெருக்கி,

"உற்ற ஆக்கையின் உறுபொருள்" என்னும் அருளமுத உண்டியை இழந்து—புருஷார்த்தங்களை இழந்து,

சத்தாகிய உடலைப் பிணமாக மண்ணில் வீழ்த்தி அசேதனத் துவம் என்னும் சாதலை அடைந்து கும்பிக்கே ஆளாகி அலமரா நிற்கும் ஆதர் நீர்மையும் இன்னதே என்பதும் மிகையாமோ?

இன்ன நீர்மை வாய்ந்த மேதாவிகளாகிய மூர்த்திகளுக்கு —சந்நிதானங்களுக்கு — அரிய பெரிய முத்தி என்பதை மாத்திரம் மனோ பாவனையால் வெகு சுலபமாக அடைந்து விடலாம் எனவும்,

பசி தாகம் மல சல விசர்ச்சனம் முதலிய வற்றை மனோ பாவனையால் அடக்க முடியாது எனவும்,

முத்தி சாதனத்துக்கும் அநித்திய

மான சரீர தர்மத்துக்கும் யாது சம்பந்தமும் இல்லை எனவும்,

வெட்கமின்றி வாய் கூசாது விளம்பிப் பிறரை அனுப்பி மூச்சு விட்டுக் கொண்டு சிறிது காலம் இயங்கி,

மாண்டு போதற்கு எனவே வாழுகின்ற — சாதலை எதிர் பார்த்து வீற்றிருக்கின்ற எம் போலிய கூதறை கட்டு இடித்து இடித்து உரைத்து உண்மையை அறிவுறுத்துவான் திருவுவுளங் கொண்டு,

மூவடி முப்பது என்னும் அரிய பெரிய சைவ நன் மறையை — தமிழ் வேதத்தை அருளிய இடைக்காடர் என்னும் தத்துவப் பெரியார்,

மேலே கூறியவை அனைத்தும்,

அஃதாவது

மெய்யி னின்று உயிர் தோன்றியதா?

உயிரி னின்று மெய் தோன்றியதா?

என்பன போன்ற சங்கையினுலாய கலக்கத்தால் உண்மையை உணர்ந்து தெளிவடைவ தென்பது பகற்கனவே என்றும்,

நெய்க்குத் தொன்னை ஆதாரமா?
தொன்னைக்கு நெய் ஆதாரமா?

என்னும் பிரசாத மூர்த்தியின் காரிருளினும் தடித்த அஞ்ஞான போதத்தால் ஆய கலக்கத்தை நிவர்த்திப்பான் ஆசை கொண்டு கையாண்ட அகப்புறச் சான்றுகளைப் போன்ற முறைகளால் உண்மையை உணர்ந்து தெளிவடைவ தென்பதும் பகற்கனவே என்றும் வெள்ளிடை மலை போல விளக்கிக் காட்டுபவராய்,

"கலக்கம்"

என்னும் மகுடம் தாங்கிய இவ் அரிய சூக்தத்தை அருளிச் செய்வாராயினர் என அறிதற் பாற்று.

மேல் இச் சூக்தப் பொருள் ஒரு சிறிது கூறி இக் கட்டுரை முடிக்கப் படும்.

1

தெளிவின் வித்து ஆய்

2

உறுப்பு அதை திறல் அறிவு நலம்பட நாட்டும் நெறி விளக்கு ஆவதை

3

கலக்கம் என்றே கழறுவது உலகே.

அ

சத்தும் சித்துமாகிய உடலும் உயிரும் பெண்ணும் ஆணும் என மயங்கிக் கலத்தலால் ஆய நிறையால் தெளிவு நிறை பெறுதலால் அத்தகைய வாய்மையான கலக்கம் வாய்மையான —நிலையான தெளிவின் வித்தாகும் என்பது.

ஆ

அசுத்த பௌதிகங்களால் ஆய இன்மை அமைப்பே பெற்று அழிந்து படும் நிறையுடைய உறுப்புக்கள் (சரீரம் — உடலுயிர்) தங்கள் இன்மை நிறை கெட்டு மறைந்து கிடக்கும் தங்கள் ஆற்றல்களை அறிதலோடு (ஆற்றல்களை அறிந்து) பேரின்ப லாபம் பெறும்படி — நித்தியத்துவம் பெறும்படி அவற்றை மாற்றும் — விமலமாக்கும் அமல நெறியாகிய விளக்கம் ஆகும் என்பது.

இ

இன்ன நீர்மைகளைப் பயக்கும் வாய்மையான கலக்கமாகிய சாதலுருச் சாதலைக் கலக்கம் எனும் சாதாரண வார்த்தையால் கூறுவது சாலாது என்பது.

கலக்கம் என்னும் சொல்லுக்குத் 'தெளிவின் வித்து" என்று மாத்திரம் பொருள் கூறி அமையாது,

அக் கலக்கமே உறுப்புக்கள் (உறுப்புக்களால் ஆய உடலுயிர்) தங்கள் திறலை — அளப்பில் ஆற்றலை அறிதலோடு பேரின்ப லாபம் பெறும்படி — நித்தியத்துவம் பெறும்படி

அவ் உறுப்புக்களாகிய உப்பில் இருக்கும் துப்பை நீக்கி — களிம்பை நீக்கி அவற்றை விமலமாய் அமலமாய் மாற்றமடையச் செய்யும் அமல நெறியாகிய விளக்கு

"நலம்பட நாட்டும் நெறி விளக்கு"

எனவும் கூறிப் போந்தனர் எமது வித்தகச் சித்தர் பெருமானர் என அறிதற்பாற்றும்.

இதனல் பெறப்படுவது யாது?

உலகில் பாமரரே பெரும்பான்மையினர் ஆதலால், அன்னர் நிலைமைக்கு ஏற்ப, சரியை, கிரியை, யோகம், ஞானம்— சாதன சதுட்டயங்கள் என்பன யாவும் தற்சுதந்தரத்தால் திரிக்கப்பட்டுக் கையாளப்படுகின்றன எனவும்,

இவரெல்லாம் யோகப் படியில் இருக்கின்றவர் எனவும், ஞானத்தைக் கரை கண்டவர் எனவும் போற்றப் பட்டும்,

ரிஷிகள் முனிவர்கள் பரமஹம்ஸர்கள் முதலிய திருநாமங்களைப் பெற்றும்,

தங்களுக்கு மாணவர்கள் —சிஷ்யர்கள் இல்லையே என ஏக்கமுற்று அதன் பொருட்டாகச் சிற் சில நடை நொடிகளை அமைத்துக் கொண்டு,

புரூரவன், நளன், அரிச்சந்திரன் முதலிய பண்டைப் பெரியாரின் சரித்திரங்களை நாடக மேடையில் நடிப்பால் விளக்கிக் காட்டி அதனல் பெருங் கீர்த்தியும் ஊதியமும் பெற்று உய்வத

ற்கு ஒப்பான சில சாதுர்யமான தந்திரங்களால்,

சீடர்களைத் திரட்டிப் பலப் பல வஞ்சகமான உபாயங்களால் உயிர் வாழ்க்கையை நடாத்தியும் மாண்டு போவதே யன்றி — சரீரம் பிணமாகி விழச் செத்துப் போவதே யன்றி,

வருந்தித் தவங் கிடந்தார்—ஊசி முனையில் நிற்கின்றார்—பனிக்கட்டியில் நிர்வாணியாய் விறைத்துக் கிடக்கின்றார்—பெண்களைக் கண்ணால் காணவும் அஞ்சுவர் (கனவிற் கண்டால் அஞ்சுவரோ? கொஞ்சுவரோ?) எனவும்,

இன்னோரன்ன பலப் பல வகையாகக் கலக்கங்கள் அளப்பில அடைந்து தெளிந்தவர் இவர் எனக் கூறப்படுவன எல்லாம் போலியே — வெளி மயக்கே எனவும் வெள்ளிடை மலை போல விளங்க வைத்து,

மோக்கம் அடைவதும் நரகம் எய்துவதும், நற்குண நற்செய்கை துர்க்குண துர்ச்செய்கை என்னும் இன்னோரனன குணங்களும் செயல்களும் சிந்தனைகளும் பஞ்ச பௌதிக பஞ்சீகரணிப்பால் ஆய உடலுயிரின் பேட்பினால் ஆவனவே என்னும்

வேதாகம புராண இதிகாசங்களின் உட் கிடக்கையையே வெட்ட வெளிச்சமாக—பட்டப் பகல் போலக் கூறி யருளினர் எமது புலவர் பெருமான் என்பதே ஆகும்.

கலக்கம் என்றால் மயக்கம் எனப் பொருள் படும்.

ஆதலால், "குற்றங் காட்டல்" என்னும் சூத்தத்தில் கூறியதற்கு ஒப்ப, சத்து என்னும் உடலும் சித்து என்னும் உயிரும் பெண்ணும் ஆணும் என மயங்கிக் காதல் என்னும் உணர்ச்சியால் இரண்டும் கலக்குற்று—கலக்கம் எய்தி மயங்கிக் கலக்கின்றன;

சத்துச் சித்தில் மயங்கிச் சித்துச் சத்தில் மயங்கிக் கலக்கின்றன — கலங்கிக் கலக்கின்றன;

நிறை கொண்டு மயங்கி — நிறை கொண்டு கலங்கி நிறை கொண்டு கலக்கின்றன என்க.

இவ்வாறு கலங்கிக் கலங்கிக் கலக்கும் நிறைக்கு ஏற்ப உடலுயிரின் இயற்கை அமைப்பினால் ஆய குற்றங்கள் வெளிப் படும்.

நிறை ஏற்ற பெற்றி அடைய அடையக் கலக்கம் என்னும் நிறையும் மெலிவுறும். கலக்கத்தினால் ஆய தெளிவு நிறை பெறும் என்க.

இதனால், பஞ்ச பௌதிகங்கள் என்னும் பஞ்ச திணைகளின் மயக்கத்தால் — சையோகத்தால் கருப்பையில் கலக்குற்றுக் கலந்து தெளிந்து உருப் பட்டு உறுப்புக்களால் ஆய உடலுயிர் எனத் தோன்றிய சரீரம் மாறும்—மாற்ற மடையும் என அறிதற் பாற்று.

ஆசான் அருளிய படி — பணித்த படி வழுவற ஒழுகும் பெற்றி யுடைய மாணவன் பயில்வுகளால்,

இன்மையயையே பயந்து இன்மை அமைப்பே பெற்று அழிந்து படும் நிறையுடைய பஞ்ச பௌதிக பஞ்சிகரணிப்பால் ஆக்கப் பெற்ற உறுப்புக்கள்

தங்கள் இன்மை நிறை கெட்டு, தங்களுக்குள் பொதிந்து மறைந்து கிடக்கின்ற,

அஃதாவது,

விளைவேற்ற அறிந்து விளை வேற்றுமையால் மறைந்து கிடக்கின்ற தங்கள் தங்கள் ஆற்றல்களை அறிந்து "திறல் அறிவு" உய்யு மாறு திரிக்கப் படும்; நலம் பட நாட்டப் படும் என்க.

உடலும் உயிரும் ஒன்றுதற் கண் உளதாகும் கலக்கமே உறுப்புக்களுக்கு அவற்றுள் மறைந்து கிடக்கும் ஆற்றலை அறியச் செய்து அவற்றைப் பேரின்ப லாபம் பெற்று நிலைக்கும் படி—நித்தியத்துவம் அடையும் படி மாற்றம் அடையச் செய்யும் நெறியாகிய விளக்கம் ஆகும் என்க.

"உறுப்பு அதை திறல் அறிவு (பெற்று) நலம் பட நாட்டும் நெறி விளக்கு"

என்பதன் பொருள் இதுவே ஆம்.

"உறுப்பு அதை" என்புழி "அது" என்பது பகுதிப் பொருள் விகுதி. அறிவு—அறிதல்.

ஆசான் அருளும் பயில்வுகளைக் கைக் கொண்டு ஒழுகுதலால் மாணவன் உறுப்புக்கள் (சரீரம்—உடலுயிர்) நலம்பட நாட்டப் படுதலை—பேரின்ப லாபம் பெறும் படி — நித்தியத்துவம் பெறும்படி திரிக்கப் படுதலை—மாற்றப் படுதலைப் பின் வரும் பிரமாணங்களும் நன்று புலப் படுத்துவன ஆகும்.

திருவாசகம்.

———

"...............................................
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
...............................................
வாக்கிறந் தமுத மயிர்க்கால் தோறுந்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன் [தழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி [நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதோறு மேற்றின னுருகுவ(து)
உள்ளங் கொண்டோ ருருச்செய் தாங் [கெனக்(கு)
அள்ளூ றாக்கை அமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே."

(ஷ திருவண்டப்பகுதி)

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே.

(ஷை குலாப்பத்து செ.3)

## அப்பர் தேவாரம்.

நீற்றினனியிர்புன்சடையான்விடை
எற்றினனெமையாளுடையான்புலன்
பார்ற்றினன்மயிலாடுதுறையென்று
போற்றுவார்க்குமுண்டோபுவிவாழ்க்கையே.

(ஷை திருமயிலாடுதுறை — திருக்குறுந்தொகை செ.7)

## திருமந்திரம்.

பொட்டடித்தெங்கும்பிதற்றித்திரிவேனைப்
போட்டடித் தள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்
தட்டோக்க மாறினன் தன்னையுமென்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே.

(ஷை 7ம்தந். 8வது'சம்பிரதாயம் செ.4)

## திருவாசகம்.

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார் கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
....................................."

(ஷை கோயிற்றிருப்பதிகம் செ.10)

என மணிவாசகர் அருளியதும் அறிக.

உடலும் உயிரும் ஒன்றுதற் கண் உளதாகும் கலக்கம்— ஒன்றுதலாகிய கலக்கம் உலகியலுக்கு ஒப்பிய கலக்கங்கள் போல்வ தன்று.

இதனல் உளவாகும் துன்பங்கள்— பைதல்கள் — பையாப்புக்கள் இத்துணைய என இயப்பும் தரத்தன ஆகா.

எனினும், மாணவன் பிரமை அடையாமல் பயின்று உய்தி யடைதற்கு எனவே கருணை மேலீட்டினல் எமது புலவர் பெருமான் ஷை பயில்வுகளால் அடையும் துன்பங்களைக் "கலக்கம்" என உபசாரமாகக் கூறி யருளினர் என்பதே பொருத்த மாகும்.

ஏன்?

உயிரோடு அடையும் சாதலே — சாதலுருச் சாதலே — உளதாகும் சாக்காட்டைக் "கலக்கம்" என்னும் சொல்லால் — சாதாரணமான வார்த்தையால் விளக்கியது சாலாது ஆதலால் என்க.

சாதலுருச் சாதலின் பெற்றியை அறியாத உலக மாக்கள் மாணவன் அடையும் துன்பங்களைக் கலக்கம் என்று கூறி அமைவர்.

இது பற்றியே,

"கலக்கம் என்றே கழறுவ துலகே"

என்று கூறி யருளிச் சூத்தத்துக்கு முற்றுத் தந்தனர் புலவர் என அறிதற்பாற்று.

கலக்கம் கலப்பு என்பன ஒன்றே.

உடலுயிர் ஒழிவற ஒன்றுவதே — கலப்பதே அரிய பெரிய கலப்பு.

இதனல் உளதாகும் கலக்கமே அரிய பெரிய கலக்கம்.

இத்தகைய வாய்மையான கலக்கத்தினற்றுன் தெளிவு — வாய்மையான தெளிவு உளதாகும்.

இதனுற்றுன் உடலுயிர் இயக்க ஒருப் பாடாகிய இருவினை ஒப்பும் மலம் விமல மடைதலாகிய மல பரிபாகமும் உளவாகும்.

எம் பெருமான் திருவடித் தரிசனம் உளதாகும்.

மல தநு விமல தநு ஆகி மாற்ற மடையும்.

அவயவங்கள்—உறுப்புக்கள் (உறு+ உப்பு=உறுப்பு) களிம்பு நீங்கி—உப்புத் தூய்மை அடையும்; அமுத மயமாகும். தூய உணர்ச்சி — ஞான திருஷ்டி ஏற்படும்.

பின் வரும் பிரபல சுருதி இவ்வுண்மையை நன்று வலியுறுத்துதல் கண்டுகொள்க.

## திருவாசகம்.

மலங்கினேன்கண்ணினீரைமாற்றிமலங் கெடுத்தபெருந்துறை
விலங்கினேன்வினைக்கேடனேனினி மேல்விளைவதறிந்திலேன்
இலங்குகின்றநின் சேவ டிகளி ரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே.

(ஷை திருக்கழுக்குன்றப்பதிகம் செ. 3)

"கண்ணின் நீரை மாற்றி என்பது" கண்ணின் கரு விழி மையத்து அசையும் அசுத்த நீர் அமல நீராக மாற்றப்பட்டமையை உணர்த்தி நின்றது

## ஞானசம்பந்தர் தேவாரம்.

"காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
ஓதுவார் ............................."

என ஞானசம்பந்தர் அருளியதும் அறிக.

கலக்கத்தின் பயனே காதலும் கண்களில் அமல நீர் பெருக்கம் அடைதலும் ஆம்.

நிறை முறைபான சிற்றின்ப நுகர்ச்சியால் அசுத்த காமமாகிய மையல் என்னும் மயக்கத்தி னின்றும் தெளிவு பெறத் தொடங்குங்கால் காதல் என்பது ஆக்க முறும்.

## ஔவை குறள்.

உண்பெசிதீர்க்தாற்போலவுடம்பெல்லாங்
கண்டுகொள் காதல்மிகும்.

(ஷை மெய்யகம் செ.3)

என எமது பாட்டியார் அருளியதும், அறிக.

அசுத்த காமம் ஒழிந்த இடமே—காமம் ஆட்சி பெற்ற இடமே—காமம் என்னும் அசுத்த உணர்ச்சி யாகிய அசுத்த அக்கினியாகிய பசிப் பிணி கலக்கத்தால் மாற்ற மடைந்த இடமே காதல் என்க.

இதுவே கந்தழி—கந்து என்னும் அசுத்த காம உணர்ச்சி அழிந்த இடம்.

காதல் ஆக்க முற்று நிறை பெறும் வரை கலக்கம் உண்டு. இக் கலக்கம் ஒழிந்த போது தான் எம் பெருமான் திருவடி காணப் படும். இதுபற்றியே,

"......................சேவடிகள் இரண்டும் [வைப்பிடமின்றியே
கலங்கினேன்கலங்காமலேவந்து [காட்டினாய்கழுக்குன்றிலே"

(ஷை திருக்கழுக்குன்றப் பதிகம். செ.3)

என அருளிச் செய்தனர் மணிவாசகர். சேவடிகள் காணப் பட்டன — வைக்கப் பட்டன என்பன வற்றின் பொருள் என்னே?

அது தான் மனமும் மதியும் ஒன்றுதல் எனப்படுவது.

உடலுயிர் இயக்க மாகிய இரு வினையும் ஒத்த இடமும் இதுவே ஆம்.

"என் வினை ஒத்த பின்......................
காட்டினாய் கழுக் குன்றிலே"

என்றனர் மணிவாசகர்

இரவும் பகலும்—இருளும் ஒளியும் சமப் பட்ட இடம் எனபது இதுவே ஆம்.

திருமந்திரம்,

———

"இருபதடாவதிரவுப்பகலும்.........
........................................ ..........."

(ஷை 7ம்தந் திருவருள் வைப்பு செ.1)

என்னும் பிரபல சுருதிப் பொருளையும் நோக்குக.

இராப் பகல் அற்ற இடம் என்பதும் இதுவே ஆம்.

இவ் விடத்தை அடைந்த போது தான் வாய்மையான தெளிவு — தூய உணர்ச்சி — ஞான நேத்திரம் உளதாகும்.

"கலக்கமே தெளிவின் வித்து"

என்பதன் உண்மை இதனால் நன்று வலியுறுதல் கண்டு கொள்க.

கலக்கம் என்னும் சாதலுறுச் சாதலால் இத்தகைய தெளிவை அடைந்த போது தான்—இப்படியை அடைந்த போது தான் மணிவாசகர் திருக்கழுக் குன்றப் பதிகத்தை அருளிச் செய்தனர்.

அப் பதிகத்தில் திருப் பாட் டிறுதி தோறும்

"காட்டினாய் கழுக் குன்றிலே"

என்று அருளிச் செய்யப் பட்டது.

எதனைக் காட்டினர் சிவ பெருமான்? எதனைக் கண்டார் மணிவாசகா? திருக் கழுக் குன்றத்தில் இருந்தது யாது? இதனை ஆழ்ந்து நோக்கினர் உண்டோ?

இப் பூவுலகை ஆளும் ஏக சக்கிராதிபதியாய் இருப்பவனுக்கும் இந்திர போகம் தனக்கு இல்லையே என்னும் குறை உண்டு.

இப் படியை அடைந்த மெய் யடியார் நிலையோ அவ்வா றன்று. அவர் எதை நினைப்பினும் அது இயங்கும்—முன் வந்து நிற்கும்.

சகல போகங் களையும் ஆக்கும் ஆற்றல் உடையவர் இப் படியை அடைந்தவரே ஆதலால் —"நல்குரவு" என்னும தத்துவம் பூரணப் பட்டவர் இவரே ஆதலால் யாவற்றையும் நிறை கண்டு கொண்டு அநுபவித்த பின் உபரதி பெறுதற்கு உரியார்—உண்மைத் துறவிற்கு உரியார் இவரே யாவர்.

இவரே வாய்மையான பொருட் பேறு உடையார்—குபேரர்—இந்திரர் என்க.

இவர் இவ்வாறு ஆசைப் பேற்றை (மூவடி முப்பது, பொருட் கூறு சூக்தம்.10.) அடிப் படை யாக்கி உண்மைத் துறவு பெற்று நித்தியத்துவம் அடையும் உண்மையே ஷை "அறக் கூறு" என்னும் அத்தியாயத்தால் கூறப் படுவ தாகும்.

மேலே கூறியவாறு, உரிய சாதகங்களால் சாதலுறுச் சாதல் என்னும் "கலக்கம்" அடைந்தாலன்றி, அம்மையப்பன் அபயாஸ்தம் அளித்துக் கருணை பாலிப்பன் என்பது வெறும் வார்த்தையே — முயற் கொம்பேயாகும். தத்துவப் பெரியார் துணிபும் வேத உண்மையும் இதுவே ஆம்.

உரிய சாதகங்களால் உடலும் உயிரும் ஒழிவற ஒன்றுதற்கண் உளதாகும் கலக்கமே வித்தகராகிய மெய் யடியார்க்குக் குரிய சாதல் என்பது—சாதலுறுச் சாதல்—"உளதாகும் சாக்காடு" என்பது,

ஏனைய சீவர்கள் அடையும் சாதலோ எனின், அதுதான் சரீரம் பிண வியலடைய அதனை விட்டு உயிர் பிரிவதாகும்.

## திருமந்திரம்

———

கத்தித்திரிவர்கழுவடிநாய்போல்
கொத்தித்திரிவர்குரக்களிஞானிகள்
ஒத்துப்பொறியும்உடலும்இருக்கவே
செத்துத்திரிவர்சிவஞர்னியோர்களே.

(ஷை 6ம்தந். ஞானவேடம் செ. 4)

என்பது எம் அண்ணல் அருள் வாக்கு.

## குறள்.

———

நத்தம்போல் கேடும் உளதாதும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது

(ஷை. 24. அதி. புகழ். செ.5)

எனத் தேவா அருளியதும் அறிக. இக் குறட் பாவின் விளக்கமான உரையை வித்தகம் தொகுதி 1. இல.1, 16, 17 இல் காண்க.

கலக்கத்தால் தெளிவு உளதாகும்;

உறுப்புக்களில்—உடலுயிரில் உள்ள அசுத்த நிறை கேடடையும்;

அமல நிறை ஆக்க முறும்;

உடலுயிர் இயக்கம் நிறை பெற்று மாற்ற மடையும் — ஊன் உயிர் வேறுகும் — மாற்றிப் பிறத்த லாகிய துவிஜத்துவம் உளதாகும்;

பேரின்ப லாபம் கைகூடும்; நித்தியத்துவம் உளதாகும் என்க.

இதுகாறும் கூறியவைகளால், "மூவடி மும்பது" என்னும் அரிய பெரிய தமிழ்வேதத்தில் பொருட் கூறு என்னும் இரண்டாவது அத்தியாயத்தில் ஏழாம் சூக்த மகுடமாகிய "கலககம்" என்பதன் பண்பும் பயனும் ஷை சூக்தம் முதலியவாறு உணரத் தரும்.

சுபம்.

Imprimerie" VITTAGAM " -- Pondichéry. Le Directeur–Gérant. R. Nagarattinam.